# இல்லாதவனுக்குக் கொடுத்தல் இறைவனுக்குக் கொடுத்தல்

- ஓவியம் போன்று அமைந்த மாடங்களையுடைய கோயில்களில் உள்ள இறைவனுக்கு ஏதேனும் படையல் செய்தால்,
- அது நடமாடும் மாடக் கோயிலாக விளங்கும் சிவன் அடியார்க்கு வந்து சேராது.
- ஆனால் நடமாடும் கோயிலாய் விளங்கும் சிவனடியாருக்கு ஏதேனும் ஒன்றைத் தந்தால்,
- அது மாடக்கோயிலில் உள்ள இறைவனுக்கு மன நிறைவை அளிக்கும்

## சிவனடியாருக்குக் கொடுத்தலே
## சிவனுக்குக் கொடுத்தல் ஆகும்

**படமாடக் கோயில் பகவற்கு ஒன்று ஈயின்**
**நடமாடக் கோயில் நம்பர்க்கு ஆங்கு ஆகா**
**நடமாடக் கோயில் நம்பர்க்கு ஒன்று ஈயில்**
**படமாக் கோயில் பகவற்கு அது ஆமே**

# நீயே இறைவனின் ஆலயம்

- உடம்பே ஆலயம்,
- உடம்பினுள் விளங்கும் உள்ளமே இறைவன் எழுந்தருளியிருக்கும் கருவறை,
- வாய் கோபுரவாசல்,
- நன்கு தெரிந்தவர்களுக்கு உயிரே சிவலிங்கம்,
- கள்ளம் புரியும் புலன்கள் ஐந்தும் பெரிய விளக்கு.

# நீயே இறைவனின் ஆலயம்

உள்ளம் பெருங்கோயில் / ஊனுடம்பு ஆலயம் /
வள்ளல் பிரானார்க்கு / வாய் / கோபுரவாசல் /
தெள்ளத் தெளிந்தார்க்குச் / சீவன் சிவலிங்கங் /
கள்ளப் / புலனைந்துங் காளா மணிவிளக்கே /

# இளமை நிலையாமை

- கதிரவன், கிழக்குத் திசையில்  தோன்றி
- மேற்கில் மறைவதைக் கண்டும்
- அறிவில்லாதவர் நிலையாமையை உணர மாட்டார்.
- அதுபோல்,
- கன்று சிலநாளில் வளர்ந்து மூப்பு அடைந்து இறப்பதைக் கண்டும்
- அகன்ற இவ்வுலகத்தவர் இளமை நிலையாமையை உணரமாட்டார்

# இளமை நிலையாமை

கிழக்கு எழுந்து ஓடிய / ஞாயிறு / மேற்கே விழக் கண்டும் / தேறார் / விழிஇலா மாந்தர் / குழக்கன்று / மூத்து / எருதாய்ச் / சில நாளில் / விழக்கண்டும் / தேறார் / வியன் உலகோரே /

# தானச்சிறப்பு

- எவரேயாயினும் அவர்க்குக் கொடுங்கள்.
- “அவர் உயர்ந்தோர், இவர் தாழ்ந்தோர்” என எண்ணாதீர்கள்.
- வரும் விருந்தை எதிர்பார்த்து அவருடன் கூடி உண்ணுங்கள்.
- பழம் பொருளைப் போற்றி காவாதீர்கள்!
- இம்மை மறுமையில் வேட்கை உடையவரே!
- மிக விரைவாக உண்ண வேண்டா.
- காக்கைகள் உண்ணும்போது மற்றக் காகங்களை அழைத்து உண்பதை அறிந்து கொள்ளுங்கள்.

# தானச்சிறப்பு

ஆர்க்கும் / இடுமின் / அவரிவர் என்னன்மின் /
பார்த்திருந்து உண்மின் / பழம்பொருள் போற்றன்மின் /
வேட்கையுடையீர் / விரைந்தொல்லை உண்ணன்மின் /
காக்கை கரைந்துண்ணுங் / காலம் அறிமினே /

# எல்லோருக்கும் முடியக் கூடிய செயல்கள்

- உணவை உண்பதற்கு முன்னம் இறைவனைப் பச்சிலை இட்டு வணங்குதல் எல்லோர்க்கும் முடியக் கூடிய செயலாகும்.
- அப்படியே பசுவுக்கு ஒருவாய் அளவு புல் அளித்தல் எல்லோர்க்கும் முடியக் கூடிய செயலாகும்.
- அதுபோன்றே உண்பதற்கு முன்பு சிறிது உணவு பிறர்க்குக் கொடுத்தல் எல்லோருக்கும் முடியக் கூடியதாகும்.
- பிறரிடம் இனிய சொற்களைப் பேசுதல் யாவர்க்கும் முடியக் கூடிய செயலாகும்.
- எனவே முடியக் கூடிய இவற்றை செய்வீராக.

# எல்லோருக்கும் முடியக் கூடிய செயல்கள்

யாவர்க்குமாம் / இறைவற்கொரு / பச்சிலை
யாவர்க்குமாம் / பசுவுக்கொரு / வாயுறை
யாவர்க்குமாம் / உண்ணும் போதொரு / கைப்பிடி
யாவர்க்குமாம் / பிறர்க் கின்னுரை / தானே.

# அன்புடைமை

- அனுபவம் அற்றவர் அன்பாகிய சக்தியும் அறிவாகிய சிவமும் இரண்டு என்பர்.
- அன்பின் முதிர்ச்சியால் சிவமாகிய அறிவு விளங்கும் என்பதை உயர்ந்தவர் தாழ்ந்தவர் ஆகிய எவரும் உணர்வதில்லை.
- அன்புதான் சிவத்தை விளங்கச் செய்வது என்பதை எல்லோரும் அறிந்த பின்பு அன்பே வடிவாய்ச் சிவமாம் தன்மையை அடைந்திருந்தார்.

# சிவன் யார்?

அன்பு / சிவம் / இரண்டென்பர் / அறிவிலார்/
அன்பே / சிவமாவதாரும் / அறிகிலார் /
அன்பே / சிவமாவதாரும் / அறிந்தபின் /
அன்பே / சிவமாய் / அமர்ந்திருந்தாரே /

- பின்னால் தயங்கி நின்று ஏன் பிறவியைப் பெறுகின்றனர்?
- அவர்கள் முந்தைய பிறவிகளில் நன்கு முயன்று தவத்தைச் செய்யாதவர்கள் ஆவார்கள்.
- எனவே, தான் நல்ல தவம் செய்திருந்தமையால் தன்னைப் பற்றித் தமிழில் நூல் செய்யும் வண்ணம் எனக்கு ஞானத்தை அளித்துச் சிவபெருமாள் பிறவியைத் தந்தருளினான்.

# அன்புடைமை

பின்னை / நின்றென்னே / பிறவி பெறுவது /
முன்னை / நன்றாக முயல் / தவம் / செய்கிலர் /
என்னை / நன்றாக / இறைவன் படைத்தனன் /
தன்னை / நன்றாகத் / தமிழ் செய்யுமாறே /

- உடலானது இறந்தபின் ஊரவர் எல்லாம் ஒன்று கூடி ஓலம் இட்டு அழுது
- அதுவரையில் உள்ள பெயரை மாற்றிப் பிணம் எனப் பெயரைச் சூட்டி
- முட்செடியான தூதுவளை படர்ந்த சுடுகாட்டில் கொண்டு போய்க் கொளுத்துவர்.
- பின்பு இங்ஙனம் ஒருவர் இருந்தார் என்ற எண்ணம் இன்றி நீரிலே ஆடிவிட்டு நீங்கிவிடுவர்.

# மனித வாழ்வு

ஊரெலாங் / கூடி / ஒலிக்க / அழுதிட்டுப் /
பேரினை நீக்கிப் / பிணமென்று / பேரிட்டுச் /
சூரையங் / காட்டிடைக் / கொண்டுபோய்ச் /
சுட்டிட்டு / நீரினில் மூழ்கி / நினைப்பொழிந்தார்களே /

# பிறன்மனை நயவாமை

- அன்புடைய மனைவி வீட்டிலே இருக்க, அவளை விட்டுப் பிறரால் காக்கப்படும் மனைவியை விரும்பும் காமியர் செயல்
- வீட்டில் நன்கு காய்த்துப் பழுத்துள்ள பலாப்பழத்தை உண்ணாமல், காட்டில் பழுத்துள்ள ஈச்சம்பழத்தைப் பெறத் துன்பப்படுவது போன்றதாகும்

# பிறன்மனை நயவாமை

ஆத்த / மனையாள் / அகத்தில் / இருக்கவே /
காத்த / மனையாளைக் / காமுறுங் / காளையர் /
காய்ச்ச பலாவின் / கனியுண்ண / மாட்டாமல் /
ஈச்சம் பழத்துக் / கிடருற்ற வாறே /